[தப்பாமே]—முப்பது பாட்டில் ஒரு பாட்டும் நழுவாமல் என்கை. விலை யில்லா மணிகளினாற் செய்த ஏகாவளியில் ஒரு மணி நழுவினாலும் நெடும்பாழா மன்றோ ?

[இப்பரிசுரைப்பார்]—திருவாய்ப்பாடியில் பெண்களுக்குக் கிருஷ்ண ஸம காலமாகையாலே க்ருஷ்ண ஸாக்ஷாத்காரங்கிடைத்தது; அந்த ஸாக்ஷாத் காரத்தைப் பிற்காலத்தில் ஆண்டாள் அநுகரித்துப் பெற்றாள்; அவளிலும் பிற் பட்டவர்கள் அப்பேறு பெறவேண்டில் இப்பாசுரங்களின் உக்திமாத்திரமே போருமென்க.

"விடிவோறே எழுந்திருந்து முப்பது பாட்டையும் அநுஸந்தித்தல், மாட்டிற்றிலனாகில் 'சிற்றஞ்சிறுகாலே' என்கிற பாட்டை அநுஸந்தித்தல், அது வும் மாட்டிற்றிலனாகில் நாம் இருந்த விருப்பை நினைப்பது" என்று பட்டர் அருளிச் செய்வர். "நாம் இருந்த விருப்பை" என்றது—நாம் [பட்டர்] இப் பிரபந்தத்தை அநுஸந்தித்து ஈடுபட்டிருந்த விருப்பை என்றபடி.

ஆக இப்பாட்டில் இப்பிரபந்தங் கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக் கட்டிற்றாயிற்று. இப்பிரபந்தத்தின் பயனைச்சொன்ன இந்தப் பாசுரம்—திரு நாமப்பாட்டென்றும், பலச்ருதி யென்றுஞ் சொல்லப்பெறும். இது ஆண்டாள் தன்னைப் பிறன் போலக் கூறியது; இது ஒரு வகைக் கவிசமயமாதலால் தற் புகழ்ச்சியாகாது; தற்சிறப்புப் பாயிர மெனப்படும்.

இத்திருப்பாவை முப்பது பாட்டும்—வெண்டளையால் வந்த எட்டடி நாற் சீரொரு விகற்பக் கொச்சகக்கலிப்பா. .... .... .... (30)

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய
**திருப்பாவை உரை**
முற்றிற்று.

— அறிக்கை —

'**திருப்பாவை விசேஷார்த்தவுரை**' என்னும் பெயரால் நாம் வெளியிட் டிருக்கும் விசேஷவுரையையும் இத்துடன் சேர்த்து அநுபவிக்கவேண்டுவது அவசியமாகும். (ப்ர. அ.)